# நூல் அறிமுகம்


| | |
|---|---|
| நூலின் பெயர் | : **போற்றி .. போற்றி ..!!** |
| நூல் ஆசிரியர் | : விசு அய்யர் |
| எழுத்து | : 11 புள்ளி |
| முதற் பதிப்பு | : 2024 |
| உரிமை | : ஆசிரியருக்கு |
| கணினி அச்சு உதவி | : மணி பதிப்பகம் |
| பக்கம் | : **24** |
| மதிப்பு | : இந்திய ரூபாயில் ரூ.30 |

# வாழ்த்துரை

இந்த குரோதி ஆண்டின் (2024 ஆம் ஆண்டு) அடுத்த வெளியீடாக இந்த நூல் ஆசிரியர் திரு விசு அய்யர் அவர்கள் தனது அடுத்த படைப்பான "**போற்றி.. போற்றி..**" என்ற தனது நூலுக்கு மதிப்புரை வழங்க வாய்ப்பு தந்து இருக்கிறார். அவருக்கு எனது மனம் நிறைந்த நன்றிகளை பதிவு செய்கிறேன்.



**R. Manikandan,** B.Com.
Treasurer, arulalayam

புத்தகம் படைப்பது ஒவ்வொரு படைப்பாளிக்கும் ஒரு பிரம்ம பிரயத்தனம். என்றாலும் அதை ரசிக்கும்படி படைப்பது/தொகுப்பது என அந்த கலையை தனக்குள் வைத்து இருக்கும் இந்த நூல் ஆசிரியரின் இந்த படைப்பு, சிறப்பு.

சைவர்களின் உயிர் வேதமான தோத்திர நூல்கள், பன்னிரு திருமுறைகள் தான். மனித வாழ்வில் எல்லா வளமும் பெறுவதற்கும், எதிர்பாராத இன்னல்களை தவிர்ப்பதற்கும், இறைவனிடம் கேட்டுப் பெரும் அரும் வழிகாட்டி தான் திருமுறை.

"வழிபாடு" என்பது இறைவனை போற்றி பாடுவது என்பதை சைவ அன்பர்கள் நான்கு அறிவார்கள். பிறப்பு இறப்பு இல்லாத இறைவனை, நாம் போற்றி பாட திருமுறைகளில் இருந்து அருளாளர்கள் தொகுத்து தந்த திருமுறைகளில் இருந்து தொகுத்து பெற பெற்றது தான் இந்த நூல். "போற்றி.. போற்றி.." என்று தலைப்பிட்டு, நம்மை வழிபாட்டில் நெறிபடுத்துவது இந்த நூல் என்றால் மிகையில்லை.

பூமியில் வாழும் அனைத்து உயரினங்களும் ஏதோ ஒருவகையில் வழிபாடு இயற்றுகின்றன. பேச தெரிந்த மனிதன் இறைவனின் திருநாமத்தை "வாயார வாழ்த்தி" என அப்பர் சுவாமிகள் சொல்வது போல, வாழத்தி தினம் தோறும் பாடுவதற்கு எளிமை படுத்தி தொகுத்து கொடுத்த இந்த நூல் ஆசிரியரின் முயற்சியை உலமாற பாராட்டுகிறோம்.

வழிபாட்டின் சிறப்புகளை சொல்லி, தினமும் வழிபாடு நம்மால் முடிந்த அளவு இயற்ற வேண்டும் என ஆசிரியர் வைக்கும் வேண்டுகோள் மனதை தொடுகிறது. நிற்க எனக்கு நேரமில்லை நெடுந்தூரம் போக வேண்டும் என்ற இந்த அவசர உலகில் அலைபேசியில் பதிவு செய்து கொண்டால் கூட எளிதாக நேரம் கிடைக்கும் போது படித்து பயன் பெற மின்நூலாக வடிவமைத்த பாங்கு பாராட்டுக்குறியது.

ஒரு சோதிட குழுவில், தற்செயலாக இந்த நூல் ஆசிரியரை சந்தித்து அவர் தம் சோதிட சிந்தனைகளையும், ஆய்வு குறிப்புகளையும் படித்து ரசித்து பழகியவன் என்பதுடன் தொடர்ந்து ஆசிரியரின் இன்ன பிற நூலகளுக்கு வாழ்த்துரை தந்து உள்ளேன் என்பதில் உவகையுடன் மகிழ்ச்சி கொள்கிறேன்.

இந்த புத்தகம் தொகுப்பு நூலாக வந்துள்ளமையால், அதனை ஆன்மிக அன்பர்கள் மட்டும் அல்ல தமிழறிந்த அனைவரும் வாங்கி படித்து இன்புற வேண்டும் என மெத்த பணிவுடன் கேட்டுக் கொள்கிறேன்.

பன்முக திறமை கொண்ட இந்த நூல் ஆசிரியரின், படைப்புகளில் இது இன்னொமொரு தொகுப்பு. இது மக்கள் மனதில் இடம் பிடிக்கும் என உறுதியாக சொல்லலாம். இந்த நூல் ஆசிரியர் வயது கூடினாலும், ஊக்கம் குறையாமல் மேலும் பல நூல்களை இந்த அறம் கூறும் இந்த தமிழ் சமூகத்திற்கு படைத்து தர வேண்டும் என எனது விருப்பத்தை பதிவு செய்கிறேன்.

இந்த புத்தகத்தை வாங்கி படித்து, பயன் அடைந்து நூல் ஆசிரியரை ஊக்கப்படுத்த வேண்டும் என அன்புடன் விரும்புகிறேன்..

உங்கள்

மணிகண்டன்

maniiyer73@gmail.com

# என்னுரை

போற்றி என்பார் அமரர் புனிதன் அடி;
போற்றி என்பார் அசுரர் புனிதன் அடி;
போற்றி என்பார் மனிதர் புனிதன் அடி;
- திருமந்திரம்

போற்றி என வாயார வாழ்த்தும் மனதில், அன்பு ஊறும். அன்பு மனதில் ஊறினால், உண்மை வெளிப்படும். உண்மை வெளிப்படும் போது, மனதில் நம்பிக்கை பிறக்கும். மனதில் நம்பிக்கை பிறந்தால், மனதில் அமைதி நிலவும். தனி மனித மனதில் அமைதி இருந்தால் இந்த சமூகத்தில் நிம்மதி நிலவும்.

ஆக, சமூகம் நிம்மதியாக இருக்க வேண்டும் என்றால், அடிப்படையில் வழிபாடு அவசியம். அந்த வழிபாடு எளிமையாக எல்லோரும் செய்யக் கூடியதாக, இருக்க வேண்டும் என்பதற்காக, இறைவனை வாழ்த்தி பாட "**போற்றி.. போற்றி..**" என்ற தலைப்பிட்ட இந்த நூல் துணையாக அமையும் என்ற வகையில் இந்த புத்தகம் உங்களுக்கு படைக்கப்பட்டு உள்ளது.

தமிழ் வேதமாக போற்றப்படும் பன்னிரு திருமுறைகளில் இருந்து பாடல் குறிப்புகளை மட்டும் தொகுத்து தந்து உள்ளோம். பெரிய புத்தகங்களை வைத்துக் கொண்டு தேடி படிக்க நேரமில்லாத சூழலில், அதில்இருந்து சில பகுதிகளை தொகுத்து படிப்பதற்கு எளிமையாகவும் எங்கும் எடுத்துச் செல்ல வசதியாகவும் மின் புத்தகமாக வடிவமைத்து தரப்பட்டுள்ளது. ஒரு அலைபேசியில் வைத்துக் கொண்டு நேர வாய்ப்பு கிடைக்கும் போது எல்லாம் படித்து பயன்பெற வேண்டும் என அன்புடன் வேண்டுகிறோம்.

பஞ்சாட்சர மந்திரத்திற்குரிய இறைவனாரும், கூஷாடாக்ஷர மந்திரத்திற்குரிய வேலவனும் வேறு அல்ல. முருகன் அறுமுக சிவனே என்ற நோக்கில் அன்பர்கள் வேறுபாடு கருதாது இந்த தொகுப்பை தமிழ அறிந்த அனைத்து அன்பார்களும் படித்து படனம் செய்து இன்புற வேண்டும்.

“**போற்றி.. போற்றி..**” என்று தலைப்பிட்ட, இந்த நூலினை வழக்கம் போல கணினி அச்சு செய்து புத்தகமாக உருவாக்கி கொடுத்த **மணி பதிப்பகத்தாரு**க்கு நன்றியை பதிவு செய்கிறேன்.

எனது வேண்டுகோளை ஏற்று நூலிற்கு வாழ்த்துரை தந்த அருளாலயம் அமைப்பின் பொருளாளர் **திரு.மணிகண்டன் அய்யர் அவர்களுக்கு** மனம் நெகிழ்ந்த நன்றியையும் பாராட்டுதல்களையும் பதிவு செய்கிறேன்.

நமது நூல் படைப்பின் வரிசையில் இன்னொரு ,மைல் கல் என்ற ஆவலில் இந்த புத்தகத்தினை வழக்கம் போல வாங்கி படித்து பயன் அடைந்து நூல் ஆசிரியரை ஊக்கப்படுத்த வேண்டும். இந்த நூல் அமேசான், விக்கி மீடியா மற்றும் மின் நூலகம் போன்ற தளங்களில் கிடைக்கும்.

பேரன்புடன்

*விசு அய்யர்*

iyervisuiyer@gmail.com

திருச்சிற்றம்பலம்

வேற்றாகி விண்ணாகி நின்றாய் போற்றி
        மீளாமே ஆளென்னைக் கொண்டாய் போற்றி
ஊற்றாகி உள்ளே ஒளித்தாய் போற்றி
        ஓவாத சத்தத்து ஒலியே போற்றி
ஆற்றாகி அங்கே அமர்ந்தாய் போற்றி
        ஆறு அங்கம் நால்வேதம் ஆனாய் போற்றி
காற்றாகி எங்கும் கலந்தாய் போற்றி
        கயிலை மலையானே போற்றி போற்றி. 1

பிச்சாடல் பேயோடு உகந்தாய் போற்றி
        பிறவி அறுக்கும் பிரானே போற்றி
வைச்சாடல் நன்று மகிழ்ந்தாய் போற்றி
        மருவி என் சிந்தை புகுந்தாய் போற்றி
பொய்ச்சார் புரமூன்றும் எய்தாய் போற்றி
        போகாது என் சிந்தை புகுந்தாய் போற்றி
கச்சாக நாகம் அசைத்தாய் போற்றி
        கயிலை மலையானே போற்றி போற்றி. 2

மருவார் புரம் மூன்றும் எய்தாய் போற்றி
        மருவி என் சிந்தை புகுந்தாய் போற்றி
உருவாகி என்னைப் படைத்தாய் போற்றி
        உள்ளாவி வாங்கி ஒளித்தாய் போற்றி
திருவாகி நின்ற திறமே போற்றி
        தேசம் பரவப் படுவாய் போற்றி
கருவாகி ஓடும் முகிலே போற்றி
        கயிலை மலையானே போற்றி போற்றி. 3

வானத்தார் போற்றும் மருந்தே போற்றி
வந்து என்தன் சிந்தை புகுந்தாய் போற்றி
ஊனத்தை நீக்கும் உடலே போற்றி
ஓங்கி அழலாய் நிமிர்ந்தாய் போற்றி
தேனத்தை வார்த்த தெளிவே போற்றி
தேவர்க்குந் தேவனாய் நின்றாய் போற்றி
கானத்தீ யாடல் உகந்தாய் போற்றி
கயிலை மலையானே போற்றி போற்றி. 4

ஊராகி நின்ற உலகே போற்றி
ஓங்கி அழலாய் நிமிர்ந்தாய் போற்றி
பேராகி எங்கும் பரந்தாய் போற்றி
பெயராது என் சிந்தை புகுந்தாய் போற்றி
நீராவி யான நிழலே போற்றி
நேர்வார் ஒருவரையும் இல்லாய் போற்றி
காராகி நின்ற முகிலே போற்றி
கயிலை மலையானே போற்றி போற்றி. 5

சில்லுருவாய்ச் சென்று திரண்டாய் போற்றி
தேவர் அறியாத தேவே போற்றி
புல்லுயிர்க்கும் பூட்சி புணர்த்தாய் போற்றி
போகாது என் சிந்தை புகுந்தாய் போற்றி
பல்லுயிராய்ப் பார்தோறும் நின்றாய் போற்றி
பற்றி உலகை விடாதாய் போற்றி
கல்லுயிராய் நின்ற கனலே போற்றி
கயிலை மலையானே போற்றி போற்றி. 6

பண்ணின் இசையாகி நின்றாய் போற்றி
        பாவிப்பார் பாவம் அறுப்பாய் போற்றி
எண்ணும் எழுத்தும்  சொல் ஆனாய் போற்றி
        என்சிந்தை நீங்கா இறைவா போற்றி
விண்ணும் நிலனும்  தீயானாய் போற்றி
        மேலவர்க்கும் மேலாகி நின்றாய் போற்றி
கண்ணின் மணியாகி நின்றாய் போற்றி
        கயிலை மலையானே போற்றி போற்றி. 7

இமையாது உயிராது இருந்தாய் போற்றி
        என்சிந்தை நீங்கா இறைவா போற்றி
உமைபாக மாகத் தணைத்தாய் போற்றி
        ஊழி ஏழ்  ஆன ஒருவா போற்றி
அமையா அருநஞ்சம் ஆர்ந்தாய் போற்றி
        ஆதி புராணனாய் நின்றாய் போற்றி
கமையாகி நின்ற கனலே போற்றி
        கயிலை மலையானே போற்றி போற்றி. 8

மூவாய் பிறவாய் இறவாய் போற்றி
        முன்னமே தோன்றி முளைத்தாய் போற்றி
தேவாதி தேவர்தொழுந் தேவே போற்றி
        சென்றேறி எங்கும் பரந்தாய் போற்றி
ஆவா அடியேனுக்கு எல்லாம் போற்றி
        அல்லல் நலிய அலந்தேன் போற்றி
காவாய் கனகத் திரளே போற்றி
        கயிலை மலையானே போற்றி போற்றி. 9

நெடிய விசும்போடு கண்ணே போற்றி
நீள அகலம் உடையாய் போற்றி
அடியும் முடியும் இகலி போற்றி
அங்கொன்று அறியாமை நின்றாய் போற்றி
கொடிய வன்கூற்றம் உதைத்தாய் போற்றி
கோயிலா என்சிந்தை கொண்டாய் போற்றி
கடிய உருமொடு மின்னே போற்றி
கயிலை மலையானே போற்றி போற்றி. 10

உண்ணாது உறங்காது இருந்தாய் போற்றி
ஓதாதே வேதம் உணர்ந்தாய் போற்றி
எண்ணா இலங்கைக்கோன் தன்னைப் போற்றி
இறைவிரலால் வைத்து உகந்த ஈசா போற்றி
பண்ணார் இசையின்சொற் கேட்டாய் போற்றி
பண்டே என் சிந்தை புகுந்தாய் போற்றி
கண்ணா உலகுக்கு நின்றாய் போற்றி
கயிலை மலையானே போற்றி போற்றி.

திருச்சிற்றம்பலம்

பொறையுடைய பூமி நீரானாய் போற்றி
பூதப் படையாள் புனிதா போற்றி
நிறை உடைய நெஞ்சின் இடையாய் போற்றி
நீங்காது என் உள்ளத்து இருந்தாய் போற்றி
மறையுடைய வேதம் விரித்தாய் போற்றி
வானோர் வணங்கப் படுவாய் போற்றி
கறை உடைய கண்டம் உடையாய் போற்றி
கயிலை மலையானே போற்றி போற்றி. 1

முன்பாகி நின்ற முதலே போற்றி
மூவாத மேனி முக்கண்ணா போற்றி
அன்பாகி நின்றார்க்கு அணியாய் போற்றி
ஆறேறு சென்னிச் சடையாய் போற்றி
என்பாக எங்கும் அணிந்தாய் போற்றி
என்சிந்தை நீங்கா இறைவா போற்றி
கண்பாவி நின்ற கனலே போற்றி
கயிலை மலையானே போற்றி போற்றி. 2

மாலை எழுந்த மதியே போற்றி
மன்னியென் சிந்தை இருந்தாய் போற்றி
மேலை வினைகள் அறுப்பாய் போற்றி
மேலாடு திங்கள் முடியாய் போற்றி
ஆலைக் கரும்பின் தெளிவே போற்றி
அடியார்கட்கு ஆரமுதம் ஆனாய் போற்றி
காலை முளைத்த கதிரே போற்றி
கயிலை மலையானே போற்றி போற்றி. 3

உடலின் வினைகள் அறுப்பாய் போற்றி
ஒள் எரி வீசும் பிரானே போற்றி
படருஞ் சடைமேல் மதியாய் போற்றி
பல்கணக் கூத்தப் பிரானே போற்றி
சுடரிற் திகழ்கின்ற சோதி போற்றி
தோன்றி என் உள்ளத்து இருந்தாய் போற்றி
கடலின் ஒளியாய முத்தே போற்றி
கயிலை மலையானே போற்றி போற்றி. 4

மைசேர்ந்த கண்டம் உடையாய் போற்றி
மாலுக்கும் ஓராழி ஈந்தாய் போற்றி
பொய்சேர்ந்த சிந்தை புகாதாய் போற்றி
போகாது என் உள்ளத்து இருந்தாய் போற்றி
மெய்சேரப் பால்வெண்ணீறாடி போற்றி
மிக்கார்கள் ஏத்தும் விளக்கே போற்றி
கைசேர் அனல் ஏந்தி ஆடீ போற்றி
கயிலை மலையானே போற்றி போற்றி. 5

ஆறேறு சென்னி முடியாய் போற்றி
அடியார்கட்கு ஆ ரமுதாய் நின்றாய் போற்றி
நீறேறு மேனி உடையாய் போற்றி
நீங்காது எ ன் உள்ளத்து இருந்தாய் போற்றி
கூறேறு மங்கை மழுவா போற்றி
கொள்ளுங் கிழமை ஏழானாய் போற்றி
காறேறு கண்ட மிடற்றாய் போற்றி
கயிலை மலையானே போற்றி போற்றி. 6

அண்டமே உழன்று கடந்தாய் போற்றி
ஆதி புராணனாய் நின்றாய் போற்றி
பண்டை வினைகள் அறுப்பாய் போற்றி
பாரோர்விண் ஏத்தப் படுவாய் போற்றி
தொண்டர் பரவும் இடத்தாய் போற்றி
தொழில்நோக்கி ஆளுஞ் சுடரே போற்றி
கண்டங் கறுக்கவும் வல்லாய் போற்றி
கயிலை மலையானே போற்றி போற்றி. 7

பெருகி அலைக்கின்ற ஆறே போற்றி
பேராநோய் பேர விடுப்பாய் போற்றி
உருகி நினைவார்தம் உள்ளாய் போற்றி
ஊனந் தவிர்க்கும் பிரானே போற்றி
அருகி மிளிர்கின்ற பொன்னே போற்றி
ஆரும் இகழப் படாதாய் போற்றி
கருகிப் பொழிந்தோடு நீரே போற்றி
கயிலை மலையானே போற்றி போற்றி. 8

செய்ய மலர்மேலான் கண்ணன் போற்றி
தேடி உணராமை நின்றாய் போற்றி
பொய்யாநஞ் சுண்ட பொறையே போற்றி
பொருளாக என்னை ஆட்கொண்டாய் போற்றி
மெய்யாக ஆனஞ் சுகந்தாய் போற்றி
மிக்கார்கள் ஏத்துங் குணத்தாய் போற்றி
கையானை மெய்த்தோல் உரித்தாய் போற்றி
கயிலை மலையானே போற்றி போற்றி. 9

மேல்வைத்த வானோர் பெருமான் போற்றி
மேலாடு புரமூன்று மெய்தாய் போற்றி
சீலத்தான் தென் இலங்கை மன்னன் போற்றி
சிலையெடுக்க வாயலற வைத்தாய் போற்றி
கோலத்தாற் குறைவில்லான் தன்னை அன்று
கொடிதாகக் காய்ந்த குழகா போற்றி
காலத்தாற் காலனையுங் காய்ந்தாய் போற்றி
கயிலை மலையானே போற்றி போற்றி.

திருச்சிற்றம்பலம்

பாட்டான நல்ல தொடையாய் போற்றி
பரிசை அறியாமை நின்றாய் போற்றி
சூட்டான திங்கள் முடியாய் போற்றி
தூமாலை மத்தம் அணிந்தாய் போற்றி
ஆட்டானது அஞ்சும் அமர்ந்தாய் போற்றி
அடங்கார் புரமெரிய நக்காய் போற்றி
காட்டானை மெய்த்தோல் உ ரித்தாய் போற்றி
கயிலை மலையானே போற்றி போற்றி. 1

அதிரா வினைகள் அறுப்பாய் போற்றி
ஆல நிழற்கீழ் அமர்ந்தாய் போற்றி
சதுரா சதுரக் குழையாய் போற்றி
சாம்பர் மெய்பூசுந் தலைவா போற்றி
எதிரா உலகம் அமைப்பாய் போற்றி
என்றுமீளா அ ருள் செய்வாய் போற்றி
கதிரார் கதிருக்கோர் கண்ணே போற்றி
கயிலை மலையானே போற்றி போற்றி. 2

செய்யாய் கரியாய் வெளியாய் போற்றி
செல்லாத செல்வம் உடையாய் போற்றி
ஐயாய் பெரியாய் சிறியாய் போற்றி
ஆகாச வண்ணம் உடையாய் போற்றி
வெய்யாய் தணியாய் அணியாய் போற்றி
வேளாத வேள்வி உடையாய் போற்றி
கையார் தழலார் விடங்கா போற்றி
கயிலை மலையானே போற்றி போற்றி. 3

ஆட்சி உலகை உ டையாய் போற்றி
அடியார்க்கு அமுது எலாம் ஈவாய் போற்றி
சூட்சி சிறிதும் இலாதாய் போற்றி
சூழ்ந்த கடல்நஞ்சம் உண்டாய் போற்றி
மாட்சி பெரிதும் உடையாய் போற்றி
மன்னி என் சிந்தை மகிழ்ந்தாய் போற்றி
காட்சி பெரிதும் அரியாய் போற்றி
கயிலை மலையானே போற்றி போற்றி. 4

முன்னியா நின்ற முதல்வா போற்றி
மூவாத மேனி உடையாய் போற்றி
என்னியா எந்தை பிரானே போற்றி
ஏழின் இசையே உகப்பாய் போற்றி
மன்னிய மங்கை மணாளா போற்றி
மந்திரமும் தந்திரமும் ஆனாய் போற்றி
கன்னியார் கங்கைத் தலைவா போற்றி
கயிலை மலையானே போற்றி போற்றி. 5

உரியாய் உலகினுக்கு எல்லாம் போற்றி
உணர்வு என்னும் ஊ ர்வது உடையாய் போற்றி
எரியாய தெய்வச் சுடரே போற்றி
ஏசுமா முண்டி உடையாய் போற்றி
அரியாய் அமரர்கட்கு எ ல்லாம் போற்றி
அறிவே அடக்கம் உடையாய் போற்றி
கரியானுக்கு ஆழி அ ன்று ஈந்தாய் போற்றி
கயிலை மலையானே போற்றி போற்றி. 6

எண்மேலும் எண்ணம் உடையாய் போற்றி
ஏறரிய வேறுங் குணத்தாய் போற்றி
பண்மேலே பாவித்து இருந்தாய் போற்றி
பண்ணொடுயாழ் வீணை பயின்றாய் போற்றி
விண்மேலும்  மேலும் நிமிர்ந்தாய் போற்றி
மேலார்கண் மேலார்கண் மேலாய் போற்றி
கண்மேலுங் கண் ஒன்று உ டையாய் போற்றி
கயிலை மலையானே போற்றி போற்றி. 7

முடியார் சடையின் மதியாய் போற்றி
முழுநீறு சண்ணித்த மூர்த்தி போற்றி
துடியார்  இடை உமையாள் பங்கா போற்றி
சோதித்தார் காணாமை நின்றாய் போற்றி
அடியார் அடிமை அறிவாய் போற்றி
அமரர் பதியாள வைத்தாய் போற்றி
கடியார் புரமூன்றும் எய்தாய் போற்றி
கயிலை மலையானே போற்றி போற்றி. 8

போற்றிசைத்து உன் அடி பரவ நின்றாய் போற்றி
புண்ணியனே நண்ணல் அரியாய் போற்றி
ஏற்றிசைக்கும் வான்மேல் இருந்தாய் போற்றி
எண்ணாயிரநூறு பேராய் போற்றி
நாற்றிசைக்கும் விளக்காய நாதா போற்றி
நான்முகற்கும் மாற்கு மரியாய் போற்றி
காற்றிசைக்குந் திசைக்கெல்லாம் வித்தே போற்றி
கயிலை மலையானே போற்றி போற்றி. 9

திருச்சிற்றம்பலம்

எல்லாஞ் சிவன் என நின்றாய் போற்றி
எரிசுடராய் நின்ற இறைவா போற்றி
கொல்லார் மழுவாட் படையாய் போற்றி
கொல்லுங் கூற்று ஒன்றை உதைத்தாய் போற்றி
கல்லாதார் காட்சிக்கு அரியாய் போற்றி
கற்றார் இடும்பை களைவாய் போற்றி
வில்லால் வியனரணம் எய்தாய் போற்றி
வீரட்டங் காதல் விமலா போற்றி. 1

பாட்டுக்கும் ஆட்டுக்கும் பண்பா போற்றி
பல் ஊ ழியாய படைத்தாய் போற்றி
ஓட்டகத்தே ஊணா உகந்தாய் போற்றி
உள்குவார் உள்ளத்து உ றைவாய் போற்றி
காட்டகத்தே ஆடல் மகிழ்ந்தாய் போற்றி
கார்மேகம் அன்ன மிடற்றாய் போற்றி
ஆட்டுவதோர் நாகம் அசைத்தாய் போற்றி
அலைகெடில வீரட்டத்து ஆள்வாய் போற்றி. 2

முல்லையங் கண்ணி முடியாய் போற்றி
முழுநீறு பூசிய மூர்த்தி போற்றி
எல்லை நிறைந்த குணத்தாய் போற்றி
ஏழ்நரம்பின் ஓசை படைத்தாய் போற்றி
சில்லைச் சிரைத்தலையில் ஊணா போற்றி
சென்றறு அடைந்தார் தீவினைகள் தீர்ப்பாய் போற்றி
தில்லைச்சிற் றம்பல மேயாய் போற்றி
திருவீரட் டானத்து எ ம் செல்வா போற்றி. 3

சாம்பர் அகலத் தணிந்தாய் போற்றி
தவநெறிகள் சாதித்து நின்றாய் போற்றி
கூம்பித் தொழுவார்தங் குற்றேவலைக்
குறிக்கொண்டு இருக்கும்  குழகா போற்றி
பாம்பும் மதியும் புனலுந் தம்மிற்
பகைதீர்த்து உ டன்வைத்த பண்பா போற்றி
ஆம்பல் மலர்கொண்டு அணிந்தாய் போற்றி
அலைகெடில வீரட்டத்து ஆள்வாய் போற்றி. 4

நீறேறு நீல மிடற்றாய் போற்றி
நிழல்திகழும் வெண்மழுவாள் வைத்தாய் போற்றி
கூறே று உ மை ஒருபாற் கொண்டாய் போற்றி
கோள் அரவம் ஆட்டுங் குழகா போற்றி
ஆறேறு சென்னி உடையாய் போற்றி
அடியார்கட்கு ஆ ரமுதம் ஆனாய் போற்றி
ஏறேற என்றும் உகப்பாய் போற்றி
இருங்கெடில வீரட்டத்து எந்தாய் போற்றி. 5

பாடுவார் பாடல்  உகப்பாய் போற்றி
பழையாற்றுப் பட்டீச் சுரத்தாய் போற்றி
வீடுவார் வீடு அருள வல்லாய் போற்றி
வேழத்து உரிவெருவப் போர்த்தாய் போற்றி
நாடுவார் நாடற்கு அரியாய் போற்றி
நாகம் அரைக்கு அசைத்த நம்பா போற்றி
ஆடுமானைந்தும் உகப்பாய் போற்றி
அலைகெடில வீரட்டத்து ஆள்வாய் போற்றி. 6

மண்டுளங்க ஆடல் மகிழ்ந்தாய் போற்றி
மால்கடலும் மால்விசும்பும் ஆனாய் போற்றி
விண்டுளங்க மும்மதிலும் எய்தாய் போற்றி
வேழத்து உரிமூடும் விகிர்தா போற்றி
பண்டுளங்கப் பாடல் பயின்றாய் போற்றி
பார்முழுதும் ஆய பரமா போற்றி
கண்டுளங்கக் காமனைமுன் காய்ந்தாய் போற்றி
கார்க்கெடிலங் கொண்ட கபாலி போற்றி. 7

வெஞ்சினவெள்ளேறு ஊர்தி உடையாய் போற்றி
விரிசடைமேல் வெள்ளம் படைத்தாய் போற்றி
துஞ்சாப் பலிதேருந் தோன்றால் போற்றி
தொழுதகை துன்பந் துடைப்பாய் போற்றி
நஞ்சு ஒடுங்குங் கண்டத்து நாதா போற்றி
நான்மறையோடு ஆறங்கம் ஆனாய் போற்றி
அஞ்சொலாள் பாகம் அமர்ந்தாய் போற்றி
அலைகெடில வீரட்டத் தாள்வாய் போற்றி. 8

சிந்தையாய் நின்ற சிவனே போற்றி
சீபர்ப் பதம் சிந்தை செய்தாய் போற்றி
புந்தியாய்ப் புண்டரிகத்து உள்ளாய் போற்றி
புண்ணியனே போற்றி புனிதா போற்றி
சந்தியாய் நின்ற சதுரா போற்றி
தத்துவனே போற்றி எ ன் தாதாய் போற்றி
அந்தியாய் நின்ற அரனே போற்றி
அலைகெடில வீரட்டத்து ஆள்வாய் போற்றி. 9

முக்கணா போற்றி முதல்வா போற்றி
        முருகவேள் தன்னைப் பயந்தாய் போற்றி
தக்கணா போற்றி தருமா போற்றி
        தத்துவனே போற்றி எ ன் தாதாய் போற்றி
தொக்கணா எ ன்று இருவர் தோள்கை கூப்பத்
        துளங்காது எ ரிசுடராய் நின்றாய் போற்றி
எக்கண்ணுங் கண்ணிலேன் எந்தாய் போற்றி
        எறிகெடில வீரட்டத்து ஈசா போற்றி. 10

திருச்சிற்றம்பலம்

## திருவாசகம் - போற்றித் திரு அகவல்

நான்முகன் முதலா வானவர் தொழுது எழ
ஈர் அடியாலே மூவுலகு அளந்து
நால் திசை முனிவரும் ஐம்புலன் மலரப்
போற்றி செய் கதிர்முடித் திருநெடுமால் அன்று
அடிமுடி அறியும் ஆதரவு அதனில்
கடும் முரண் ஏனம் ஆகிமுன் கலந்து
ஏழ்தலம் உருவ இடந்து பின் எய்த்து
ஊழி முதல்வ சயசய என்று
வழுத்தியும் காணா மலர்அடி இணைகள்
வழுத்துதற்கு எளிதாய் வார் கடல் உலகினில்

யானை முதலா எறும்பு ஈறாய
ஊனம் இல் யோனியின் உள்வினை பிழைத்தும்
மானுடப் பிறப்பினுள் மாதா உதரத்து
ஈனம் இல் கிருமிச் செருவினில் பிழைத்தும்
ஒரு மதித் தான்றியின் இருமையில் பிழைத்தும்
இருமதி விளைவின் ஒருமையில் பிழைத்தும்
மும்மதி தன்னுள் அம்மதம் பிழைத்தும்

ஈர் இரு திங்களில் பேர் இருள் பிழைத்தும்
அஞ்சு திங்களில் முஞ்சுதல் பிழைத்தும்
ஆறு திங்களில் ஊறு அலர் பிழைத்தும்

ஏழு திங்களில் தாழ் புவி பிழைத்தும்
எட்டுத் திங்களில் கட்டமும் பிழைத்தும்
ஒன்பதில் வருதரு துன்பமும் பிழைத்தும்
தக்க தசமதி தாயொடு தான்படும்
துக்க சாகரத் துயரிடைப்பிழைத்தும்
ஆண்டுகள் தோறும் அடைந்த அக்காலை
ஈண்டியும் இருத்தியும் எனைப்பல பிழைத்தும்
காலை மலமொடு கடும்பகல் பசி நிசி
வேலை நித்திரை யாத்திரை பிழைத்தும்
கரும்குழல் செவ்வாய் வெண்ணகைக் கார்மயில்

ஒருங்கிய சாயல் நெருங்கி உள் மதர்த்துக்
கச்சு அற நிமிர்ந்து கதிர்த்து முன் பணைத்து
எய்த்து இடைவருந்த எழுந்து புடைபரந்து
ஈர்க்கு இடைபோகா இளமுலை மாதர்தம்
கூர்த்த நயனக் கொள்ளையில் பிழைத்தும்
பித்த உலகர் பெருந்துறைப் பரப்பினுள்
மத்தக் களிறு எனும் அவாவிடைப் பிழைத்தும்
கல்வி என்னும் பல்கடல் பிழைத்தும்
செல்வம் என்னும் அல்லலில் பிழைத்தும்
நல்குரவு என்னும் தொல்விடம் பிழைத்தும்

புல்வரம்பு ஆய பலதுறை பிழைத்தும்
தெய்வம் என்பதோர் சித்தம் உண்டாகி
முனிவு இலாததோர் பொருள் அது கருதலும்
ஆறு கோடி மாயா சத்திகள்

வேறு வேறு தம் மாயைகள் தொடங்கின
ஆத்தம் ஆனார் அயலவர் கூடி
நாத்திகம் பேசி நாத்தழும்பு ஏறினர்
சுற்றம் என்னும் தொல்பசுக் குழாங்கள்
பற்றி அழைத்துப் பதறினர் பெருகவும்
விரதமே பரம் ஆக வேதியரும்

சரதம் ஆகவே சாத்திரம் காட்டினர்
சமய வாதிகள் தத்தம் மதங்களே
அமைவதாக அரற்றி மலைந்தனர்
மிண்டிய மாயா வாதம் என்னும்
சண்ட மாருதம் சுழித்து அடித்துத் ஆஅர்த்து
உலோகாயதனெனும் ஒண் திறற் பாம்பின்
கலா பேதத்த கடுவிடம் எய்தி
அதில் பெருமாயை எனைப்பல சூழவும்
தப்பாமே தாம் பிடித்தது சலியாத்
தழலது கண்ட மெழுகு அது போலத்

தொழுது உளம் உருகி அழுது உடல்கம்பித்து
ஆடியும் அலறியும் பாடியும் பரவியும்
கொடிறும் பேதையும் கொண்டது விடாதெனும்
படியே ஆகி நல் இடைஅறா அன்பின்
பசுமரத்து ஆணி அறைந்தால் போலக்
கசிவது பெருகிக் கடல் என மறுகி
அகம் குழைந்து அனுகுலமாய் மெய் விதிர்த்துச்
சகம் பேய் என்று தம்மைச் சிரிப்ப
நாண் அது ஒழிந்து நாடவர் பழித்துரை
பூண் அது ஆகக் கோணுதல் இன்றிச்

சதுர் இழந்து அறிமால் கொண்டு சாரும்

கதியது பரம அதிசயம் ஆகக்
கற்றா மனம் எனக் கதறியும் பதறியும்
மற்று ஓர் தெய்வம் கனவிலும் நினையாது
அருபரத்து ஒருவன் அவனியில் வந்து
குருபரன் ஆகி அருளிய பெருமையைச்
சிறுமை என்று இகழாதே திருவடி இணையைப்
பிறிவினை அறியா நிழல் அது போல
முன் பின்னாகி முனியாது அத்திசை
என்பு நைந்து உருகி நெக்கு நெக்கு ஏங்கி

அன்பு எனும் ஆறு கரை அது புரள
நன்புலன் ஒன்றி நாத என்று அரற்றி
உரை தடுமாறி உரோமம் சிலிர்ப்பக்
கரமலர் மொட்டித்து இருதயம் மலரக்
கண்களி கூர நுண் துளி அரும்பச்
சாயா அன்பினை நாள்தொறும் தழைப்பவர்
தாயே ஆகி வளர்த்தனை போற்றி
மெய் தரு வேதியன் ஆகி வினைகெடக்
கைதரவல்ல கடவுள் போற்றி
ஆடக மதுரை அரசே போற்றி
கூடல் இலங்கு குருமணி போற்றி
தென் தில்லை மன்றினுள் ஆடி போற்றி
இன்று எனக்கு ஆர் அமுது ஆனாய் போற்றி
மூவா நான்மறை முதல்வா போற்றி
சேவார் வெல்கொடிச் சிவனே போற்றி
மின் ஆர் உருவ விகிர்தா போற்றி
கல் நார் உரித்த கனியே போற்றி
காவாய் கனகக் குன்றே போற்றி
ஆ ஆ என்தனக்கு அருளாய் போற்றி
படைப்பாய் காப்பாய் துடைப்பாய் போற்றி

இடரைக் களையும் எந்தாய் போற்றி
ஈச போற்றி இறைவ போற்றி
தேசப் பளிங்கின் திரளே போற்றி
அரைசே போற்றி அமுதே போற்றி
விரை சேர் சரண விகிர்தா போற்றி
வேதி போற்றி விமலா போற்றி
ஆதி போற்றி அறிவே போற்றி
கதியே போற்றி கனியே போற்றி
நதி சேர் செஞ்சடை நம்பா போற்றி
உடையாய் போற்றி உணர்வே போற்றி

கடையேன் அடிமை கண்டாய் போற்றி
ஐயா போற்றி அணுவே போற்றி
சைவா போற்றி தலைவா போற்றி
குறியே போற்றி குணமே போற்றி
நெறியே போற்றி நினைவே போற்றி
வானோர்க்கு அரிய மருந்தே போற்றி
ஏனோர்க்கு எளிய இறைவா போற்றி
மூவேழ் சுற்றம் முரண் உறு நரகிடை
ஆழாமே அருள் அரசே போற்றி
தோழா போற்றி துணைவா போற்றி

வாழ்வே போற்றி என் வைப்பே போற்றி
முத்தா போற்றி முதல்வா போற்றி
அத்தா போற்றி அரனே போற்றி
உரைஉணர்வு இறந்த ஒருவ போற்றி
விரிகடல் உலகின் விளைவே போற்றி
அருமையில் எளிய அழகே போற்றி
கருமுகி லாகிய கண்ணே போற்றி
மன்னிய திருவருள் மலையே போற்றி

என்னையும் ஒருவ னாக்கி இருங்கழல்
சென்னியில் வைத்த சேவக போற்றி

தொழுதகை துன்பந் துடைப்பாய் போற்றி
அழிவிலா ஆனந்த வாரி போற்றி
அழிவதும் ஆவதும் கடந்தாய் போற்றி
முழுவதும் இறந்த முதல்வா போற்றி
மான்நேர் நோக்கி மணாளா போற்றி
வானகத்து அமரர் தாயே போற்றி
பாரிடை ஐந்தாய்ப் பரந்தாய் போற்றி
நீரிடை நான்காய் நிகழ்ந்தாய் போற்றி
தீயிடை மூன்றாய்த் திகழ்ந்தாய் போற்றி
வளியிடை இரண்டாய் மகிழ்ந்தாய் போற்றி

வெளியிடை ஒன்றாய் விளைந்தாய் போற்றி
அளிபவர் உள்ளத்து அமுதே போற்றி
கனவிலும் தேவர்க்கு அரியாய் போற்றி
நனவிலும் நாயேற்கு அருளினை போற்றி
இடைமருது உறையும் எந்தாய் போற்றி
சடையிடைக் கங்கை தரித்தாய் போற்றி
ஆரூர் அமர்ந்த அரசே போற்றி
சீர் ஆர் திருவையாறா போற்றி
அண்ணாமலை எம் அண்ணா போற்றி
கண் ஆர் அமுதக் கடலே போற்றி

ஏகம்பத்து உறை எந்தாய் போற்றி
பாகம் பெண் உரு ஆனாய் போற்றி
பராய்த் துறை மேவிய பரனே போற்றி
சிராப்பள்ளி மேவிய சிவனே போற்றி
மற்று ஓர் பற்று இங்கு அறியேன் போற்றி

குற்றாலத்து எம் கூத்தா போற்றி
கோகழி மேவிய கோவே போற்றி
ஈங்கோய் மலை எம் எந்தாய் போற்றி
பாங்கு ஆர் பழனத்து அழகா போற்றி
கடம்பூர் மேவிய விடங்கா போற்றி

அடைந்தவர்க்கு அருளும் அப்பா போற்றி
இத்தி தன்னின் கீழ் இருமூவர்க்கு
அத்திக்கு அருளிய அரசே போற்றி
தென்னாடுடைய சிவனே போற்றி
எந்நாட்டவர்க்கும் இறைவா போற்றி
ஏனக் குருளைக்கு அருளினை போற்றி
மானக் கயிலை மலையாய் போற்றி
அருளிட வேண்டும் அம்மான் போற்றி
இருள் கெட அருளும் இறைவா போற்றி
தளர்ந்தேன் அடியேன் தமியேன் போற்றி

களம் கொளக் கருத அருளாய் போற்றி
அஞ்சேல் என்று இங்கு அருளாய் போற்றி
நஞ்சே அமுதா நயந்தாய் போற்றி
அத்தா போற்றி ஐயா போற்றி
நித்தா போற்றி நிமலா போற்றி
பத்தா போற்றி பவனே போற்றி
பெரியாய் போற்றி பிரானே போற்றி
அரியாய் போற்றி அமலா போற்றி
மறையோர் கோல நெறியே போற்றி
முறையோ தரியேன் முதல்வா போற்றி

உறவே போற்றி உயிரே போற்றி
சிறவே போற்றி சிவமே போற்றி
மஞ்சா போற்றி மணாளா போற்றி
பஞ்சேர் அடியாள் பங்கா போற்றி
அலந்தேன் நாயேன் அடியேன் போற்றி
இலங்கு சுடர் எம் ஈசா போற்றி
கவைத்தலை மேவிய கண்ணே போற்றி
குவைப்பதி மலிந்த கோவே போற்றி
மலை நாடு உடைய மன்னே போற்றி
கலை ஆர் அரிகேசரியாய் போற்றி

திருக்கழுக் குன்றில் செல்வா போற்றி
பொருப்பு அமர் பூவணத்து அரனே போற்றி
அருவமும் உருவமும் ஆனாய் போற்றி
மருவிய கருணை மலையே போற்றி
துரியமும் இறந்த சுடரே போற்றி
தெரிவு அரிது ஆகிய தெளிவே போற்றி
தோளா முத்தச் சுடரே போற்றி
ஆள் ஆனவர்கட்கு அன்பா போற்றி
ஆரா அமுதே அருளே போற்றி
பேர் ஆயிரம் உடைப் பெம்மான் போற்றி

தாளி அறுகின் தாராய் போற்றி
நீள் ஒளி ஆகிய நிருத்தா போற்றி
சந்தனச் சாந்தின் சுந்தர போற்றி
சிந்தனைக்கு அரிய சிவமே போற்றி
மந்திர மாமலை மேயாய் போற்றி
எந்தமை உய்யக் கொள்வாய் போற்றி
புலிமுலை புல் வாய்க்கு அருளினை போற்றி
அலைகடல் மீமிசை நடந்தாய் போற்றி

கருங் குருவிக்கு அன்று அருளினை போற்றி
இரும் புலன் புலர இசைந்தனை போற்றி

படி உறப் பயின்ற பாவக போற்றி
அடியொடு நடு ஈறு ஆனாய் போற்றி
நரகொடு சுவர்க்கம் நானிலம் புகாமல்
பரகதி பாண்டியற்கு அருளினை போற்றி
ஒழிவற நிறைந்த ஒருவ போற்றி
செழு மலர்ச் சிவபுரத்து அரசே போற்றி
கழு நீர் மாலைக் கடவுள் போற்றி
தொழுவார் மையல் துணிப்பாய் போற்றி
பிழைப்பு வாய்ப்பு ஒன்று அறியா நாயேன்
குழைத்த சொல்மாலை கொண்டருள் போற்றி

புரம்பல எரித்த புராண போற்றி
பரம் பரஞ்சோதிப் பரனே போற்றி
போற்றி போற்றி புயங்கப் பெருமான்
போற்றி போற்றி புராண காரண
போற்றி போற்றி சய சய போற்றி.

திருச்சிற்றம்பலம்

## பதினொன்றாம் திருமுறை

காலற் சீறிய கழலோய் போற்றி
மூலத் தொகுதி முதல்வ போற்றி
ஒற்றி மாநகர் உடையோய் போற்றி
முற்றும் ஆகிய முதல்வ போற்றி
அணைதொறும் சிறக்கும் அமிர்தே போற்றி

இணைபிறி தில்லா ஈச போற்றி
ஆர்வம் செய்பவர்க் கணியோய் போற்றி
தீர்வில் இன்சுவைத் தேனேபோற்றி
வஞ்சனை மாந்தரை மறந்தோய் போற்றி
நஞ்சினை அமிர்தாய் நயந்தோய் போற்றி

விரிகடல் வையக வித்தே போற்றி
புரிவுடை வனமாய்ப் புணர்ந்தோய் போற்றி
காண முன்பொருள் கருத்துறை செம்மைக்
காணி யாகிய அரனே போற்றி
வெம்மை தண்மை என்று இவைகுணம் உடைமையின்

பெண்ணோ டாணெனும் பெயரோய் போற்றி
மேவிய அவர்தமை வீட்டினிற் படுக்கும்
தீப மாகிய சிவனே போற்றி
மாலோய் போற்றி மறையோய் போற்றி
மேலோய் போற்றி வேதிய போற்றி

சந்திர போற்றி தழலோய் போற்றி
இந்திர போற்றி இறைவ போற்றி
அமரா போற்றி அழகா போற்றி
குமரா போற்றி கூத்தா போற்றி
பொருளே போற்றி போற்றி என்றுனை

நாத்தழும்பு இருக்க நவிற்றின் அல்லது
ஏத்துதற்கு உரியோர் யார்இரு நிலத்தே.

திருச்சிற்றம்பலம்

சதுர்முகன் தந்தைக்குக் கதிர்விடு கடவுள்
ஆழி கொடுத்த பேரருள் போற்றி
முயற்சியொடு பணிந்த இயக்கர்கோ னுக்கு
மாநிதி இரண்டும் ஆனாப் பெருவளத்து
அளகை ஒன்றும் தளர்வின்றி நிறுவிய

செல்வங் கொடுத்த செல்வம் போற்றி
தாள்நிழல் அடைந்த மாணிக் காக
நாண்முறை பிறழாது கோண்முறை வலித்துப்
பதைத்துவருங் கூற்றைப் படிமிசைத் தெறிக்க
உதைத்துயிர் அளித்த உதவி போற்றி

குலைகுலை குலைந்த நிலையாத் தேவர்
படுபேர் அவலம் இடையின்றி விலக்கிக்
கடல்விடம் அருந்தின கருணை போற்றி
தவிராச் சீற்றத் தவுணர் மூவெயில்
ஒல்லனல் கொளுவி ஒருநொடி பொடிபட

வில்லொன்று வளைத்த வீரம் போற்றி
பூமென் கரும்பொடு பொடிபட நிலத்துக்
காமனைப் பார்த்த கண்ணுதல் போற்றி
தெய்வ யாளி கைமுயன்று கிழித்தெனக்
கரியொன் றுரித்த பெருவிறல் போற்றி
பண்டு பெரும்போர்ப் பார்த்தனுக் காகக்
கொண்டு நடந்த கோலம் போற்றி
விறற்பதம் ஒன்றில் வெள்ளிமலை எடுத்த
அரக்கனை நெரித்த ஆண்மை போற்றி
விலங்கல் விண்டு விழுந்தென முன்னாள்

சலந்தரன் தடிந்த தண்டம் போற்றி
தாதையை எறிந்த வேதியச் சிறுவற்குப்
பரிகலங் கொடுத்த திருவுளம் போற்றி
நின்முதல் வழிபடத் தன்மகன் தடிந்த
தொண்டர் மனையில் உண்டல் போற்றி
வெண்ணெய் உண்ண எண்ணுபு வந்து
நந்தா விளக்கை நுந்துபு பெயர்த்த
தாவுபுல் எலிக்கு மூவுல காள
நொய்தினில் அளித்த கைவளம் போற்றி
பொங்குளை அழல்வாய்ப் புகைவிழி ஒருதனிச்

சிங்கங் கொன்ற சேவகம் போற்றி
வரிமிடற் றெறுழ்வலி மணியுகு பகுவாய்
உரகம் பூண்ட ஒப்பனை போற்றி
கங்கையும் கடுக்கையும் கலந்துழி ஒருபால்
திங்கள் சூடிய செஞ்சடை போற்றி
கடவுள் இருவர் அடியும் முடியும்
காண்டல் வேண்டக் கனற்பிழம்பாகி
நீண்டு நின்ற நீளம் போற்றி
ஆலம் பில்குநின் சூலம்போற்றி
கூறுதற் கரியநின் ஏறு போற்றி
ஏக வெற்பன் மகிழும் மகட் கிடப்
பாகங் கொடுத்த பண்பு போற்றி
தில்லை மாநகர் போற்றி தில்லையுட்
செம்பொன் அம்பலம் போற்றி அம்பலத்
தாடும் நாடகம் போற்றி என்றாங்கு
என்றும் போற்றினும் என்தனக் கிறைவ
ஆற்றல் இல்லை ஆயினும்
போற்றி போற்றிநின் பொலம்பூ அடிக்கே

திருச்சிற்றம்பலம்

# ஆசிரியரின்
# மக்கள் மனம் கவர்ந்த பிற நூல்கள்.




விசு அய்யரின் புத்தகங்கள், அமேசானில் படிக்க கிடைக்கும். மின் நூலகத்தில் கிடைக்கும். புத்தகங்களை பெற QR code scan செய்யவும்.



# ஆசிரியர் குறிப்பு..

விசு அய்யர், தமிழ்நாட்டில் உள்ள வீரம் செறிந்த பசும்பொன் முத்துராமலிங்க தேவர் மாவட்டத்தில், சிவகெங்கை சீமையில் இந்துக்களால் சிறப்பாக கொண்டாடப்படும் ஸ்ரீ கிருஷ்ண ஜெயந்தி நன்னாளில், இன்று உலக எழுத்தறிவு தினமாக கொண்டாடப்படும் தினத்தில் தோன்றியவர்.



வரி சட்டத்தில் முதுகலை பட்டம் பெற்றவர். பள்ளி நாள் முதல் தொடர்ந்து சிறந்த மாணவனாக தேர்ந்து எடுக்கப்பட்ட இவர் இந்திய அளவிலான நினைவு திறன் போட்டியில் பரிசு பெற்றவர். தேசிய அளவிலான அதிவேக தட்டச்சு போட்டியில் வெற்றி பெற்றவர். “சித்தாந்த ரத்னா”, “திருவருட் செல்வர்”, “கைரேகை கலைஞன்” போன்ற இவர் பெற்ற பாராட்டுக்களும் நன்மதிப்பும் பெருமைக்கு உரியன.

இன்று வரை உண்மையான பிரம்மச்சரிய வாழ்க்கையில், உணவிலும், உணர்விலும் இயற்கையோடு இனைந்து வாழும் சீரிய ஒழுக்கத்தை கொண்டவர். பெரியபுராணம், திருக்குறள், மற்றும் சைவ திருமுறைகளில் ஆழ்ந்த ஈடுபாடு கொண்ட இவர் சமய இலக்கியங்களில் பல ஆய்வு கட்டுரைகளை பதிப்பித்து உள்ளார்.

பன்முக திறமை கொண்ட இவர் எழுதிய சோதிட புத்தகங்களும் வார இதழில் எழுதும் தொடர் கட்டுரைகளும் வாசகர்கள் நெஞ்சத்தை கிள்ளி செல்லும். இவருக்கு என்றே ஒரு வாசகர் கூட்டம் இவரை சுற்றி தொடரும்.

சென்னை அரிமா சங்கம், சென்னை சுழற் சங்கம், அறிதுயில் சங்கம் மற்றும் குடும்ப நற்பணி மன்றம் போன்ற பல இடங்களில் பல்வேறு தலைப்புகளில் உரை நிகழ்த்தி உள்ளார்.

உடலாலும் உள்ளத்தாலும் சீரிய ஒழுக்கத்தினாலே இன்றும் சொல்லிலும் செயலிலும் இளைஞனாகவே இருக்கின்றார். சொந்த வாழ்க்கையில் மட்டுமின்றி, நடைமுறை வாழ்க்கையிலும் ஒரு ஒழுக்க முறையினை செயல்படுத்தும் இவர் கையில் திருக்குறளும், பையில் திருநீறும், மெய்யில் உருத்திராக்கமும் இருக்கும் என்பதே இவரின் எளிய அடையாளம்.

